### Elementary Schools

* 527 Q.—Sri P. G. MANICKAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1960-ஆம் வருடத்திலே, கோயம்புத்தூர் ஜில்லாவில் எத்தனை ஆரம்பப் பாடசாலைகள் உயர்நிலை (Higher Elementary Schools) ஆரம்பப் பாடசாலைகளாக்க நடவடிக்கைகள் எடுக்கப் பட்டன?

(ஆ) இவைகளுள், எத்தனை ஆரம்பப் பாடசாலைகள் உயர் நிலை ஆரம்பப் பாடசாலைகளாக்கப்பட்டன?

The Hon. Sri C. SUBRAMANIAM: (அ) Proposals were received in 55 cases.

(ஆ) Permission has been granted in 43 cases.

Sri P. G. MANICKAM: சில பள்ளிகளிலே—இரண்டு மைல் களுக்கு உள்ளே உள்ள இடங்களில் அதிகமான எண்ணிக்கை யுள்ள மாணவர்கள் இருக்கிறார்கள் என்றும், ஆகவே பக்கத்தில் இருக்கிற கிராமங்களிலும் அதிக மாணவர்கள் இருக்கிறார்கள் என்றும் ஆகவே உயர்நிலைப் பள்ளியாக சில ஆரம்பப் பள்ளிகளை மாற்றலாம் என்றும் ஜில்லா போர்டு சிபார்சு செய்தும், இன்ஸ் பெக்டர்கள் சிபார்சு செய்தும் மேலதிகாரிகள் கவனிக்கவில்லை. அப்படிப்பட்ட கேஸ்கள் ஏதாவது இருப்பினும் அதை மீண்டும் பரிசீலனை செய்து உயர்நிலைப்பள்ளியாக ஏற்படுத்துவார்களா?

The Hon. Sri C. SUBRAMANIAM: உத்தரவு போடவேண்டி யவர்கள் 'டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரெக்ஷன்' தான். சிபார்சு செய்கிறவர்களே செய்ய முடியாது. கீழே இருப்பவர்கள் சிபார்சு செய்வதை அப்படியே ஒப்புக்கொள்ளவேண்டுமென்பது இல்லை.

### Community Development

* 528 Q.—Sri P. G. MANICKAM: கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1960-ஆம் ஆண்டு, ஜூன், 6-ம் தேதி முதல் 11-ம் தேதி வரை ஸ்ரீநகரில் நடந்த அகில இந்திய சமுதாய அபிவிருத்தி மகாநாட்டிலே சென்னை ராஜ்யத்தின் பிரதிநிதிகளாக யார் யார் அங்கம் வகித்தார்கள்?

(ஆ) இம்மகாநாட்டிலே சமுதாய அபிவிருத்தித் திட்டங்களை தீவிரமாக அமுல் நடத்துவதற்காக என்னென்ன விதமான முறைகள் பின்பற்ற வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டன?

The Hon. Sri C. SUBRAMANIAM: (அ) The following Officers were deputed to attend the Annual Conference at Srinagar:—

1. Sri R. A. Gopalswami, I.C.S., Development Commissioner, Madras.